## கருத்துப் போட்டி எண்-27 முடிவு

"பொன் தேவதை!" சித்திரக் கதை கருத்துப் போட்டியில் கலந்து கொண்டவர்களில், மலர்மதி (வேலூர்-1), வ. ஜெய சீலன் (எச்சனம்பட்டி), எம். சரீப் (சென்னை-9), ஆர். எம். சாந்தி (கோபிசெட்டிப்பாளையம்), இ. சு. மணியன் (கோவை-40), லீ. நாகராஜன் (சங்கரலிங்கபுரம்), தி. சு. ஆறுமுகம் (திருநெல்வேலி-6), எஸ். ஜே. எ. செல்வகுமார் (செந்தாரப்பட்டி) ஆகியோர் நல்ல கருத்துக்களை எழுதி இருந்தனர்.

ஆனால் மிகச்சிறந்த கருத்தை எழுதி ரூ. 50 பரிசு பெறுபவர்:-
சி. ஹெலன் செல்வராணி,
த/பெ. பி. சின்னத்தம்பி,
40-ஏ, சிவஞானம் தெரு,
கணேசபுரம் போஸ்ட்,
நாமக்கல்-637 002.

அவரது கருத்து வருமாறு.—

"பொன் தேவதை!" சித்திரக் கதையில் முதல்தரமான விமானத்தை பயணிகளோடு பர்னபாஸ் என்ற கொடியவன் கடத்துகிறான். பயணிகள் அனைவரும் முக்கியஸ்தர்கள். விமானத்துக்கும், பயணிகளுக்கும் பெரும் தொகையை பணயமாக பர்னபாஸ் கேட்கிறான்.

அதைத் தடுக்க முனைந்த ஜேம்ஸ்பாண்டை படகில் கட்டி கடலில் இழுத்துச் சென்று, சுறாக்களுக்கு இரையாக்க உத்தரவிடுகிறான். பிறகு குடித்துவிட்டு விமானப் பணிப்பெண் அழகி வெல்வெட்டை அழைத்து வரும்படி ஆட்களை அனுப்புகிறான்!

அப்போது வெல்வெட், "அவரிடம் என்னைக் கொண்டு போவதைவிட, ஜேம்ஸ் மாதிரி என்னையும் கொன்றுவிடுங்க!" என்று கூறுகிறாள். இந்தக் கட்டமே நெஞ்சைக் கவர்ந்த பகுதியாகும்.

"தனக்கு ஏதாவது இழிவு நேர்ந்தால், உயிர்வாழாத மானம் உடையவரின் புகழை உலகத்தார் தொழுது ஏத்தி நிற்பார்கள்" என்ற கருத்துக் கொண்ட

இளிவரின் வாழாத மானம் உடையார்
ஒளி தொழுது ஏத்தும் உலகு!

என்ற வள்ளுவரின் வாய்மொழியை அந்தக் கட்டம் மெய்ப்பிக்கிறது.

உயிரைவிட மானமே பெரிது என்று கருதும் விமானப் பணிப்பெண் நம் கண் முன் உயர்ந்து நிற்கிறாள். அந்த கவரிமான் கன்னி சிறந்த எடுத்துக்காட்டாவாள். அவளது மான உணர்வுக்கும், பார்க்கும் வேலைக்கும், அணியும் உடைக்கும் சம்பந்தம் இல்லை என்று அவள் நிரூபிப்பதால், என் நெஞ்சை நெகிழச் செய்தது!"

ராணி காமிக்ஸ்—37
(மாதம் இருமுறை இதழ்)

ஜனவரி 1 – 14
1986

# 'சூப்பர் ஹீரோ' டைகர் தான் பறக்கும் மீன்!



லண்டனில் உள்ள மெழுகு கண்காட்சி சாலையில்...

நீர், இந்த கண்காட்சி காவலாளிதானே! அதோ ரெண்டு பேர், காட்சிப் பொருளை என்னவோ செய்கிருங்க. சும்மா நிற்கிறீரே?

சார்! அதோடு பேசி
பயன் இல்லை. அதுவும்
பொம்மைதான்!

அவைகள்
எல்லாமே,
டம்மிகள்தான்!

டம்மியா?
நான் அசைவதைப்
பார்த்தேனே!

சில எந்திர மெழுகு
பொம்மைகள், அவை உண்மையான
மனிதர்கள் போல் கண்களை
ஏமாற்றும்!


இதற்கிடையில், டைகரும், ஹென்றியும் அந்த மெழுகு கண்காட்சி உள்புறம் இருக்கும் "சர்வதேச பயங்கரவாதிகள் ஒழிப்பு நிறுவன" தலைமை நிலையத்துக்கு வந்தனர்.
வாங்க! ரெண்டு பேரும் பார்வையாளர் கண்ணில் படாமல்தானே உள்ளே வந்தீர்கள்?
ஒரு ஆள் எங்களைப் பார்த்து சந்தேகப்பட்டான். ஆனா நம்ம காவலாளி அவனை சமாளித்து விட்டான்!



கெய்ரோவில் இருந்து லண்டன் வந்த விமானத்தில் இந்த மோதிரத்தை கொண்டு வரும்போது நம் ஆள் பிணமா திரும்பி இருக்கான். இந்த மோதிர கல்லை வெளிச்சத்தில் பார்!



உலக படம் தெரிகிறதே! இதன் அர்த்தம் என்ன பாஸ்?
அதை நீயும், ஹென்றியும் சேர்ந்து கண்டு பிடிக்கணும். மத்திய கிழக்கு பகுதியில் உள்ள நமது கிளை நிலையத்துடன் தகவல் தொடர்பு முழுவதும் அறுந்துவிட்டது!



மறுநாள், டைகரும், ஹென்றியும் மத்திய கிழக்கு பகுதியில் உள்ள பயங்கரவாதிகள் ஒழிப்பு கிளை நிறுவன ஆபீஸ் முன் சுற்றுப் பயணிகள் போல் நின்றார்கள்.
ஹென்றி! வழக்கமான வாசல் வழியா போகாமல், கூரை மீது உள்ள ரகசிய வழி வழியா உள்ளே போவோம்!

டைகர், போட்டோ எடுப்பது போல் கேமராவை கிளிக் செய்தார். ஒரு நைலான் இழை பறந்து போனது. அதன் கொக்கி மேலே மாட்டிக்கொள்ள—



இருவரும் அதைப் பிடித்து ஏறினர்.




இருவரும் ஆபீசினுள் நுழைந்தனர்.

எல்லாரும் இறந்து விட்டனரா?

இல்லை. ஒருவகை மயக்கம். ஏதோ தீயசக்திக்கு கட்டுப்பட்டு முடங்கி கிடப்பது போல் தெரியுது!


மிஸ்டர் டைகர்!
உம்மை நாங்க எதிர்
பார்த்தோம்!


டைகர் துப்பாக்கியை எடுத்து சுடப் போனார். ஆனால், பயங்கரவாதிகளின் பொறியில் மாட்டிக்கொண்டதை அறிந்தார்.
ஆ...ஐயோ...
டைகர்! உன் அதிரடி என்னிடம் நடக்காது! இவங்க ரெண்டு பேரையும் ஜாடிக்குள் அடையுங்க!
நீ...நீ கேஸ்சன்... இல்லையா?


இருவரும் ஜாடிகளில் அடைக்கப்பட்டு கொண்டு செல்லபட்டனர்.

ஜாடி ஜெயிலில் இருந்து விடுவிக்கப் பட்டபோது டைகருக்கு நினைவு திரும்பியது.

ஆ...பாட்சா! பயங்கரவாதிகளின் முக்கிய தலைவன்!

ஆமா, டைகர்! உலக பயங்கரவாதிகள் இயக்கத்தின் பிடியில் சரியாக மாட்டிக்கொண்டாய். உனக்கு ஒரு செய்தி சொல்லவா?

உலகத்தை அழிக்கும் நிலையில் உலக பயங்கரவாதிகள் இயக்கம் இப்போது இருக்கு. அதனால், உனது சர்வதேச பயங்கரவாதிகள் ஒழிப்பு நிறுவனம் எங்களிடம் சரண் அடைய வேண்டும். இல்லை, உலகத்தை அழிப்போம்!

உனக்கு பைத்தியமா?

சர்வதேச பயங்கரவாதிகள் ஒழிப்பு நிறுவனம் முழுவதும் உடனடியா சரண் அடையாவிட்டால், உலகத்தை அழிக்க வானவெளியில் இருந்து அழிவு சாதனங்களை ஏவுவோம்!

லண்டனில் உள்ள "சர்வதேச பயங்கர-வாதிகள் ஒழிப்பு நிறுவன"த்தின் ரகசிய தலைமை நிலையம். அதன் தலைவர் எக்ஸ், எகிப்தில் உள்ள கிளை நிறுவனத்துக்கு அனுப்பப்பட்ட டைகர், ஹென்றி இருவரையும் எதிர்-பார்த்துக்கொண்டு இருந்தபோது—

என்ன இது?

இந்த மெழுகு கண்காட்சிக்கு வந்திருக்கும் இரண்டு மர்ம பொம்மைகள். இவற்றிற்கு யார் ஆர்டர் கொடுத்தது, யார் இவற்றை அனுப்பியது என்று தெரியவில்லை.

சார். அந்த பொம்மைகளை "ஸ்கேனர்" கருவி மூலம் பரிசோதித்தேன். உள்ளே உயிர் உள்ள ஜீவன்கள் இருப்பது தெரியுது!

சரி! அப்படியானால் வழக்கமான முன் ஜாக்கிரதையுடன் அவற்றை திறந்து பார்ப்போம்!

இங்கே வேண்டாம்! திடீர் என்று அது வெடித்தாலும் வெடிக்கலாம். எனவே வெடிகுண்டுகளை பரிசோதிக்கும் அறைக்கு கொண்டு போங்க!

வெடிகுண்டுகளை வெடித்து சோதிக்கும் இரும்பு காப்பறையில், இரண்டு எகிப்திய பொம்மைகளும் தொலைக் கட்டுப்பாடு கருவி மூலம் உடைக்கப்பட்டன!

எந்திர கைகள் மூலம் அவற்றை திற. உள்ளே என்ன இருக்கு பார்ப்போம்!

அது நம்ம டைகரும், ஹென்றியும். உடனடியா அவர்களை வெளியே எடுங்க!







பயங்கரவாதிகளின் தலைவர் பாட்சா, தனது ரகசிய தர்பார் மண்டபத்தில் வீற்றிருந்தார்.
நமது கோரிக்கையை ஏற்க சர்வதேச பயங்கரவாதிகள் ஒழிப்பு நிறுவனத் தலைவர் மறுத்துவிட்டார். எனவே நமது முதல் தாக்குதல் தொடங்கட்டும்!


சர்வதேச பயங்கர-வாதிகள் ஒழிப்பு நிறுவனம்.
பயங்கரவாதிகள், நம் இடத்தை கண்டுபிடித்து எங்களை இங்கே கொண்டு வந்ததால், நம்மிடம் ஒரு துரோகி இருக்கிறான்!
அதை நானும் சந்தேகித்தேன். டைகர். அந்தத் துரோகியை கண்டு பிடித்துவிட்டேன். அவனிடம் ஒரு ரேடியோ சமிக்ஞை கருவியை வைத்து உள்ளேன். அவன் எங்கே போகிறான் என்று பார்ப்போம்!


பாஸ்! நம் துரோகி ஏஜெண்டும், எதிர்தரப்பு பயங்கரவாதிகள் ஏஜெண்டும் பேசிக்கொண்டதை கேட்டோம்! சர்க்கஸ், பீரங்கி என்று பேசிக்கொண்டனர். ரோம் நகரம் என்றும் கேட்டது. அவர்கள் தாக்க இருக்கும் இடம் அதுவா இருக்கலாம்!
அப்படியானால் நீங்க ரெண்டு பேரும் அங்கே போங்க. இத்தாலில் உள்ள நம்ம ஆபீசுக்கு தகவல் சொல்கிறேன். நம்ம ஏஜெண்ட் அங்கே உங்களை சந்திப்பார்.


அதற்கிடையில், பயங்கர-வாதிகளின் தலைவர் பாட்சாவிடம், துரோகி ஏஜெண்ட் கூறினான்—
நாம் பேசிக்-கொண்டதை டைகரால் புரிந்துகொண்டு இருக்கமுடியாது. என்றாலும் நான் உடனடியா ரோம் போய், நமது திட்டத்தை மேற்பார்வை செய்கிறேன்!

டைகரும்
ஹென்றியும்
ரோம் வந்து
சேர்ந்ததும்—

CIRCUS

லண்டனில் இருந்து தகவல் வந்தது. பீரங்கி என்பது, இதோ இந்த சர்க்கசில் உள்ள பீரங்கி வித்தையா இருக்கலாம்!

சர்க்கஸ்? அது எப்படி உலகத்துக்கு அழிவை ஏற்படுத்தும்?



அடுத்த நிமிடம்...

ஏய் முட்டாள்!

இத்தாலி ஏஜெண்ட், தொப்பியை எடுத்து பாட்சாவிடம் கொடுக்கும்போது, அதில் ஒரு சிறிய ரேடியோ கருவியை வைத்தார்.

ஆயிரம் தடவை மன்னிப்பு கேட்கிறேன்.




சர்க்கஸ் கோமாளிகள் போல் டைகரும், ஹென்றியும் மாறுவேடம் பூண்டனர்.

10 நிமிடம்தான் இருக்கு. நாம் அங்கே போய் அந்த பீரங்கி வெடிக்காமல் செய்யணும்.

அது கஷ்டம்தான். அங்கே பாட்சா உட்கார்ந்து இருக்கான். அவன் கண்ணில் மண்ணைத் தூவுவது எப்படி?

பபூன் வேடத்தில் இருந்த டைகரும், ஹென்றியும் சர்க்கஸ் அரங்கில் நுழைந்தனர்.

இந்த பபூன்கள் சர்க்கஸ் ஆட்கள் இல்லை!

அப்படி ஆனால் அவர்கள் நம் எதிரிகள்! அவர்களை விரட்டு!

ஆ! ஐயோ!

ஹென்றி! இது என்ன பொருள்?

திடீர் என்று!

சிறுத்தை
புலி பாயுது!

டைகர், ஹென்றி இருவர் மீதும் சிறுத்தை மோப்பம்
பிடிக்கக்கூடிய ஒரு திரவத்தை பாட்சாவின் ஆள்
கொட்டினான். பிறகு சிறுத்தையை திறந்துவிட்டான்.
அது, அந்தப் பொருளை மோப்பம் பிடித்து பாய்ந்தது.

டைகர்! நம்மை
புலி அடித்துக் கொல்ல
சதி செய்கிறார்கள்
அந்த சண்டாள
பாவிகள்!


புலியுடன் டைகர் மோதினார். சர்க்கஸ் கூட்டத்தில் ஒரே பரபரப்பு.
டைகர் கையில் இருந்த ஆயுதத்தில் ஒரு விசேட வாயு அடைக்கப்பட்டு இருந்தது.


வெறி கொண்ட சிறுத்தை பீரங்கியில் மோதியது. அதனைப் —
ஐயோ! பீரங்கி வெடித்து விட்டதே!


சர்க்கஸ் கூட்டத்தில் களேபரம் ஏற்பட்டது.
நம் எதிரி ஏஜெண்டுகளுக்கு நன்றி. திட்டமிட்டபடி பீரங்கி வெடித்தது!


ஹென்றி வா! பாட்சா அதோ போகிறான். பின்தொடர்வோம்!
பீரங்கி வெடித்ததும் என்ன நடந்து இருக்கும்?


கடலில் நின்ற ஒரு கப்பலில்—
அங்கே எரிநட்சத்திரம் தெரிந்தது!


வானம் கருத்துவிட்டதே! சூரியகிரகணம் மாதிரி!

அடுத்த கணம்—

ஆ! கொதிக்க கொதிக்க மழை பெய்யுது!

உடல் எல்லாம் எரியுது! கப்பலைவிட்டு வெளியேறுங்க!

கப்பல் எரிந்து வெடித்து சிதறுதே! நம்ம கம்பெனிக்கு எவ்வளவு பெரிய நஷ்டம்!

டைகரும், ஹென்றியும் பாட்சாவை பின்தொடர்ந்து சென்றனர்.

ஹென்றி! நீ இங்கேயே இரு. நான் முதலில் போகிறேன். மினி ரேடியோ கருவியில் கூப்பிட்டதும் வா!




டைகர் அப்படி கூறியது அவர் காதில் வந்து பலமடங்கு பெரிதாக சத்தமாக எதிரொலித்தது!

டைகர்! நீ பல தடவை என் திட்டங்களுக்கு இடையூறு செய்துவிட்டாய். இனி நீ இங்கிருந்து தப்பி போக முடியாது.

அடுத்த கணம் பல விநோதங்கள் நிகழ்ந்தன. டைகரால் தன் கண்களையே நம்ப முடியவில்லை. அந்த திடீர் மாய ஜாலத்தால், அவர் செய்வது அறியாது திகைத்தார்.

என்ன டைகர், யாரை தேடுகிறாய்?

எல்லோரும் பாட்சா மாதிரி உள்ளனரே!







இதற்கிடையில் ஹென்றி ஒரு பொருளை கண்டு எடுத்தார்.
பாட்சா மணிபர்சை விட்டு சென்று இருக்கார். அதை எடுத்து பார்க்கிறேன்!


ஆனால் அந்த பணப் பை ஹென்றியை பொறியில் சிக்க வைக்கும் சாதனம் என்பது பிறகு புரிந்தது.
நாம் எதிர்பார்த்தபடி அவன் என் பொறியில் சிக்கிக்கொண்டான். பிடியுங்க அவனை!


கொஞ்ச நேரத்தில் டைகர் அங்கே வந்து—
ஹென்றி! நீ எங்கே இருக்கிறாய்?
ஹென்றிக்கு என்ன ஆச்சு? அவனை தனியாக விட்டுச் சென்றது என் தப்புதான்!


டைகர் உடனே ரோமில் உள்ள கிளை நிறுவனத்துக்கு திரும்பினார்.
ஹென்றியிடம் உள்ள மினி ரேடியோ கருவியில் இருந்து சமிக்ஞை கிடைக்குது. அதன்படி அவர் விமான நிலையத்தில் இருக்கிறார்.
அப்படியானால் பயங்கரவாதிகள் அவரை கடத்தி போகிறார்கள். நான் உடனே அங்கே போகணும்!

விமான நிலையத்தில்...

அந்தப் பெட்டியில் இருக்கும் சர்க்கஸ் மிருகம் எது சார்?

ஒரு சின்ன புலி. நீங்க பயப்பட வேண்டாம். அது தொந்தரவு கொடுக்காது. மயக்க மருந்து கொடுத்து இருக்கோம்!

நான் வருவதற்குள் விமானம் புறப்பட்டுவிட்டதே! அவரிடம் இருந்து பீப்...பீப்... ஒலி வரும்வரை, அவர் இருப்பிடத்தை கண்டுபிடித்து விடலாம். நான் அடுத்த விமானத்தில் புறப்படுகிறேன்.

அடுத்த விமானத்தில் டைகர் லண்டன் தலைமை நிலையம் வந்து சேர்ந்தார்.

சமிக்ஞை ஒலி, இந்த இடத்தில் இருந்து வருது!

அங்கே பழைய இரும்பு சாமான்கள் கிட்டங்கி உள்ளது. நான் அங்கே போகிறேன்.

ரேடியோ கருவி மூலம் தவறாக சமிக்ஞை கொடுத்து உன்னை பிடிக்க பாட்சா சதி செய்யலாம். எனவே எச்சரிக்கையா ஒரு காரில் போ!










தேவை இல்லாத இரும்பை நசுக்க பயன்படும் கனமான இரும்புக் கோளம் கீழே விழுந்தது.


பிறகு காந்த தூக்கி கிழே இறங்கி, அந்த கோளத்தை மேலே தூக்கியது.
அந்த பெட்டியில் இருந்துதான் சமிக்ஞை வருது! ஐயோ! ஹென்றியை காப்பாற்ற வேண்டுமே!


நில்!

உள்ளே டைகர் சென்றதும், அங்கே பாட்சா இருப்பதைப் பார்த்தார்.

பாட்சா!

EMERGENCY SWITCH

அதை மேலே தூக்கு டைகர்! அப்படிச் செய்தால் இரும்புக் கோளம் விழுந்து நசுக்குவதில் இருந்து உன் சகாவைக் காப்பாற்றலாம். அதே நேரத்தில் லண்டன் மேலே பறக்கும் எங்கள் விண்கலம் இரண்டாவது ஆயுதத்தை அனுப்பும். லண்டன் அழியும். எனவே நீ லண்டனை காக்கப் போகிறாயா? அல்லது உன் நண்பனை காப்பாற்ற போகிறாயா?

சுவிட்சை மேலே தூக்கி ஹென்றியை காப்பாற்றுகிறேன்!

அந்த இரும்பு கோள உருண்டை மின்—காந்தத்தால் ஈர்க்கப்பட்டு இருந்தது. மின்—காந்த சக்தியை நிறுத்தினால் குண்டு கீழே விழும். கொஞ்ச நேர தாமதத்துக்குப் பின், டைகர் விசையை கீழே இழுத்து கோள உருண்டையை கீழே விழச் செய்தார். அந்த இடைப்பட்ட நேரத்தில் ஹென்றி இருந்த பெட்டி இடம் நகர்ந்து இருக்கும் என்று டைகருக்குத் தெரியும். அதன்படி அது நகர்ந்து இருந்ததால், குண்டு கீழே விழுந்தபோது, நசுக்குவதற்கு ஒன்றும் இல்லாததால், மீண்டும் மேலே துள்ளியது.




அது வேகமாக வந்து தாக்க, கட்டுப்பாடு கேபின் நொறுங்கியது.

டைகர்! உன் சகா தப்பிக்கலாம்! ஆனால் லண்டன் தப்பாது!


டைகர் தப்பி ஓடினர்.
டைகரை சுட்டுக் கொல்!


சீறி வந்த குண்டுகளை, ஒரு உடைந்த காரை கேடயமாக பிடித்து தப்பினர்!
ஹென்றி! இதோ உன்னை காப்பாற்றுகிறேன்!


ஹென்றி! உனக்கு ஆபத்து இல்லையே!
எனக்கு ஒன்றும் இல்லை. ஆனல் பல் நடுங்கும்படி குளிரா இருக்கு!

ஆமா, ஹென்றி! நானும் குளிரால் நடுங்குகிறேன்! திடீர் என்று குளிர் காற்று வீசுது. வானம் இருண்டுவிட்டது. இது பயங்கரவாதிகளின் ரசாயனப்--போர்.

பயங்கரவாதிகள் ஒழிப்பு நிறுவன தலைவர், ஒரு முடிவுக்கு வந்தார்.

ஹென்றியுடன் டைகரும் ஆபத்தில் சிக்கி இருக்கலாம். அவர்களை காப்பாற்ற நானே நேரில் போகிறேன்.

சார்! வெளியே திடீர் பனி கொட்டுகிறது. லண்டனே நடுங்குது!

அந்த, பழைய இரும்பு சாமான்கள் கிட்டங்கிக்கு சீக்கிரம்! போ!

ரோடெல்லாம் ஒரே பனிக்கட்டி. முடிந்த அளவு வேகமா போகிறேன்!

பழைய இரும்பு கிட்டங்கியில்...

ஹென்றி! பனி பெய்வது நமக்கு தப்பிக்க வசதியா இருக்கு. பாட்சாவை ஏமாற்ற ஒரு உபாயம் செய்கிறேன்!

டைகரை, தப்பிக்க விடாதே!


ஹென்றியின் கண்டுபிடிப்பான ஒரு வாயு பேனாவை டைகர் எடுத்தார். அதில் அழுத்தப்பட்ட வாயு இருந்தது.
அதன் விசையை அழுத்தியதும் ஒரு ரப்பர் உருவம் வெளிப்பட்டு ஆள் உயரத்துக்கு பெரிதாகியது.


பனி மழையில் அந்த உருவம் ஆள் போல் தெரிந்தது.
அதோ டைகர்! அவனை நானே சுட்டுக் கொல்கிறேன்.


சுட்டதும் வெடிக்கிறதே! டைகர் ஏமாற்றி விட்டான்!




மூவரும் ஆபீஸ் திரும்பியதும்—

குளிர் தாங்க முடியவில்லையே. மின்சார கணப்பு அடுப்புக்கு சுவிட்சை போடு.

சாரி சார்! மின்சாரம் இல்லை!

இதோ இந்த ஸ்கேனர் கருவி வேலை செய்யுதே!

இருக்க முடியாது. எல்லா சுவிட்சையும் அணைத்து விட்டேன்.



இதுவரை இல்லாத—வரலாறு காணாத குளிரில், பனித் தாக்குதலில் லண்டன் மாநகரம் ஸ்தம்பித்தது. அதில் இருந்து காப்பாற்ற மக்கள் அனைவரும் வெளியேற்றப்பட்டனர். லண்டன் முழுவதும் காலி ஆகியது.




லண்டன் நகரம் முழுவதும் காலி ஆகிவிட்டது. ஆனால் சர்வதேச பயங்கரவாதிகள் ஒழிப்பு நிறுவனம் காலி செய்யப்படவில்லை. தலைவர் எக்ஸ்சுடன், அதிரடி மன்னன், சூப்பர் ஹீரோ டைகர் தீவிர ஆலோசனையில் இருந்தார். கண்டுபிடிப்பு விஞ்ஞானியும், வெடிகுண்டு நிபுணருமான ஹென்றி, உடன் இருந்தார்.






வெறும் பனி மண்டலமாக கிடந்த லண்டன் நகரில் பயங்கரவாதிகளைத் தேடும் கடினமான பணி தொடங்கியது.

டைகர், இப்போ நாம் பயங்கரவாதிகளை கண்டுபிடிக்கா— விட்டால், சரண் அடைவதைத் தவிர வேறு வழி இல்லை.

சரண் அடைகிற பேச்சுக்கே இடம் இல்லை!

டைகர்! அதோ பனிக் — கரடிகள்!

கரடிகள் வரும் அளவுக்கு வட துருவம், தென் துருவம் மாதிரி ஆகிவிட்டது, லண்டன்!

திடீர் என்று—

யாரோ நம்மை நோக்கி சுடுறாங்க!

நம்மை சுடுறாங்களா, அல்லது கரடிகளைச் சுடுறாங்களா தெரியவில்லை. வா, பார்ப்போம்!

பயங்கரவாதிகள் உணவு பொருள் இல்லாமல், அந்த கடையை உடைத்து எடுக்கிறார்கள்.
ஹென்றி! எனக்கு ஒரு ஐடியா வருது! பயங்கர— —வாதிகளின் தலைவர் பாட்சாவின் உணவுப் பழக்க வழக்கம் என்ன என்று நமது ஆபீஸ் குறிப்புகளில் பார்க்கணும்!
ஒரு வாரம் சென்றது. பயங்கரவாதிகள் இருந்த ரகசிய இடத்தில்—
சார்! கடைசியாக கொண்டு வந்து விட்டோம், டின்னில் அடைக்கப்பட்ட தவளைகள்!
பாஸ்! தவளைக் கால் உணவு இங்கே நிறைய இருக்கு! உங்களுக்கு பிடித்தமான உணவு!
இந்திய தவளைகளை எனக்கு பிடிக்கும்.
இதற்கு இடையில், பாதாள ரெயில் நிலையத்தில்—
பயங்கரவாதிகள் உணவுப் பொருட்களை எடுக்கும் கடையில் ரேடியோ கருவி டின்களை வைத்தோம் அல்லவா? அது வேலை செய்யுது.
இங்கிருந்து பக்கவாட்டில் ஒரு சுரங்கப் பாதை வெட்டி, கைவிடப்பட்டது. அந்தச் சுரங்கப் பாதையில்தான் பயங்கரவாதிகள் மறைந்து இருக்கணும்!

அதேநேரத்தில்
பாட்சா—

முட்டாள்களே! இது தவளை உணவு அடைக்கப்பட்ட டின் இல்லை. ரேடியோ சமிக்ஞை கருவி. நம்மை வேவு பார்க்க எதிரிகள் தந்திரம் இது! நம் இருப்பிடத்தை கண்டுபிடித்துவிட்டனர்! உடனே இதை காலி செய்யுங்க!







இதுவரை குளிரை உற்பத்தி செய்து வந்த ராட்சத இயந்திரங்கள், திடீர் என்று நிறுத்தப்பட்டதும், பனி கட்டி உருகி ஓடத் — தொடங்கியது.


பனிக் கட்டி ஆறுக பெருகி, பாதாள ரெயில் பாதையில் வெள்ளம்!
டைகர்! ஹென்றி! நாம் உயிர் தப்பித்தால் போதும்! நீந்தி தப்பியுங்க!


லண்டனில் மாமூல் வாழ்க்கை திரும்பியது. பயங்கரவாதிகள் ஒழிப்பு ஆபீசில்—
பாஸ்! பாட்சாவோ, அவரது ஆட்களின் உடல்களோ கண்டு பிடிக்கப்படவில்லை.
அப்படியானால் அவர்கள் ரகசிய வழியில் தப்பிவிட்டனர்! கொஞ்ச காலம் கழித்து மீண்டும் தாக்குவார்கள்!




ரியோ கடற்கரை. அங்கே குளிப்பவர்களை கண்காணிக்கும் காவலர் மேடையில் டைகர், காவலர் போல் நின்றுகொண்டார். ஹென்றி ஒரு படகில் ஏறிக்கொண்டு, பாட்சா என்ற பயங்கரவாதி இருந்த சொகுசு கப்பலை நோக்கி போனார். இருவரும் ரேடியோ கருவி மூலம் பேசிக்கொண்டனர்.










ஹென்றி! நீ தண்ணீரில் மூழ்கத் தொடங்கு!


உதவி! காவலரே காப்பாற்றும்! ஆபத்து!


பாட்சா கப்பலில் வெடிச் சத்தம்! ராக்கெட் மாதிரி ஏதோ மேலே கிளம்பிப் போகுதே!


பயங்கரவாதிகள் ஒழிப்பு தலைமை நிலையத்தில். தலைவர் எக்ஸ் பொறுமை இழந்தார்.
டைகர்! என்னப்பா செய்கிறாய்? கடற்கரையில் ஜாலியா குளிக்கவா உன்னை அனுப்பினேன்? ஹென்றி எங்கே? ரெண்டு பேரும் கண்ணாம்பூச்சி விளையாடுறீங்களா?


டைகர்! நீ சொன்ன விளக்கம் ஏற்றுக்கொள்ளப்பட்டது. நமது கண்காணிப்பு கருவிகள் கொடுத்த தகவல்படி பயங்கரவாதிகள் இப்போது 3-வது ராக்கெட்டை வெடித்து உள்ளனர். உடனே செயல்படு!


பாரசூட்கள்! திடீர் என்று மர்மமா தோன்றி உள்ளனவே!


ஹென்றி!
டைகர்! நான் உண்மையிலேயே தண்ணீரில் மூழ்கிவிடுவேன் போலிருக்கு! அது நம் திட்டம் இல்லையே!!


அந்த ரப்பர் படகின் கீழே டைகர் மூழ்கி, அதன் அடிப்பாகத்தில் இருந்த ரகசிய பையை திறந்தார்.
ஹென்றி! இது சுவாசிக்க உதவும் மினி பிராண வாயு கருவி!


பயங்கரவாதி பாட்சா திட்டம் என்ன?
அவர்கள் வெடித்த ராக்கெட் விண்கலம், வானவெளியில் ஒரு குறிப்பிட்ட இடத்தில் நிலை கொண்டதாம். அவர்கள் வேறு ஒருவகை ராக்கெட்டை வெடித்தனர். அதில் இருந்து சில பாரசூட்கள் வெளிப்பட்டன. அவை என்ன நாச வேலையில் ஈடுபடும் என்று கண்டுபிடிக்கணும்!

கப்பலில்...

பாட்சா அவர்களே! நம் எதிரிகள் 2 பேர் கடலில் மூழ்கியபடி நமது பாரசூட்களை ஆராய்கிறார்கள். அவர்களை தீர்த்துவிடவா?

வேண்டாம்! அவர்கள், நமது பாரசூட்களுக்கு முதல் பலி ஆகட்டும். நல்ல வேடிக்கை நமக்கு காத்திருக்கு!

இதற்கு இடையில் கடலில் இறங்கிய ஒரு பாரசூட்டை டைகர் கண்டுபிடித்தார்.

டைகர்! பாரசூட்டில் இருந்த கருவியில் இருந்து ஏதோ வெளியே வருது!

அது ஜெல்லி மீன்! ஆயிரக்கணக்கான ஜெல்லி மீன் குஞ்சுகள்!

டைகர்! அவை மின்னல் வேகத்தில் ராட்சத ஜந்துக்களா வளருது! அவை நம்மை தாக்கும்!

திடீர் என்று ஆயிரக்கணக்கான பயங்கர ஜந்துக்கள் தோன்றின!

ஹென்றி! நல்லவேளை, அவை திடீர் என்று கரையை நோக்கி கவர்ந்து இழுக்கப்பட்டு செல்கின்றன! அவை புறப்படும் இடத்தை கண்டுபிடிக்கணும்!

திடீர் என்று தோன்றிய அந்த ஆயிரக்கணக்கான ராட்சத ஜெல்லி மீன்களால் டைகரும், ஹென்றியும் திணறினார்கள்.

பாட்சாவின் கப்பலில் இருந்து அதிவேகமாக தண்ணீரோடு அனுப்பப்படும் ஒருவகை பொருளால் கவரப்பட்டு, அவை கரையை நோக்கி போகின்றன!

ஹென்றி! உடனடியா நாம் கரைக்கு திரும்பணும். சரியான முன் ஏற்பாடுடன் வருவோம்!


ராட்சத ஜெல்லி மீன்கள் கடற்கரைக்கு படை எடுத்தன.


கடற்கரையில் பீதி, கலவரம், அனைவரும் ஓடினர்!


லண்டனில், மிஸ்டர் எக்ஸ். ரியோ நகரில் உள்ள ஆபீசுடன் தொடர்பு கொண்டு—
ரியோ ஆபீசா! எக்ஸ் பேசறேன்! அங்கே டைகருடன் தகவல் தொடர்பு அறுந்துவிட்டது. எனவே என்ன நடக்குதுன்னு பார்த்து சொல்லுங்க!


ரியோ நகர ஆபீஸ்.
நம்ம ஆபீஸ் கட்டிடத்தில் என்ன?
அவை, நம்ம ஆபீசுக்குள்ளும் புகுந்துவிட்டன!
ராட்சத ஜெல்லி மீன்! அவை ஆயிரக்கணக்கில் படை எடுத்து ரியோ நகரை ஆக்ரமித்து உள்ளன. டைகர் பற்றி தகவல் இல்லே. ஒருவேளை பயங்கரவாதிகள் பிடித்து இருக்கலாம்!


ரியோ நகர கடலில் பாட்சாவின் சொகுசு கப்பலில்—
ஒருவகை பெரிய மீன்! துனு என்ற வகை. அது ஜெல்லி மீன்களை தின்ன வரலாம்!
அது என்ன?


திடீர் என்று தோன்றிய அந்த ராட்சத மீன், பாட்சா கப்பலை அடைந்தது. உடனே அந்த மீனுக்கு கால்களும் தோன்றின!


ஐயோ!
ஆ!


கப்பல் வந்தாச்சு! ஹென்றி, நான் பாட்சாவைப் பார்க்கிறேன்! நீ, உன் வேலையைப் பார்!


டைகர்! நீ எப்படி இந்த கப்பலுக்குள் நுழைந்தாய்?


நம் எதிரிகள் பெரிய முட்டாள்கள்! நேரே வந்து மாட்டிக் கொண்டனர்!


டைகர்! நீ ஏன் இங்கே வந்தாய்? அதைச் சொல்.
உன் போன்ற பயங்கரவாதிகளுக்கு சவால் விடும் நான் உன்னிடம் மாட்ட காரணம் இருக்கு.


தலைவர் பாட்சா அவர்களே! எல்லா ஜெல்லி மீன்களும் திரும்பி வருகின்றன!


ஐயோ! அவை கப்பலில் ஏறிவிட்டன. நம்மை நோக்கி வருகின்றன.
உடனடியா ஹெலிகாப்டரை தயார் பண்ணு! தப்பி ஓடுவோம்!
என் சகா ஹென்றி கீழே போய், அந்த ஜெல்லி மீன்களை கரையில் இருந்து கப்பலுக்கு திரும்பும்படி செய்து விட்டான். அதற்கு நேரம் கொடுக்கவே நான் பிடிபட்டேன்!


டைகர்! டாட்டா! நாங்க போகிறோம்! நீயும் உன் சகாவும் ஜெல்லி மீன்களிடம் சிக்கி சாகுங்க!


ஹென்றி! ஏதாவது செய். ஒன்று, நான் ஜெல்லி மீன்களிடம் சிக்க வேண்டும். அல்லது தண்ணீரில் மூழ்கிச் சாக வேண்டும். ஹென்றி! ஹென்றி!


வெடிகுண்டு நிபுணரும், புதிய புதிய கண்டுபிடிப்புகளை செய்யக்கூடிய விஞ்ஞானியுமான ஹென்றி, கப்பலினுள் எலக்ட்ரானிக் கருவிகளை கட்டுப்படுத்துவதில் தீவிரமாக இருந்தார். ஆபத்தை உணர்ந்த அவர்—
நானும், டைகரும் இந்த கப்பலோடு சேர்ந்து மூழ்க வேண்டியது —தானா? நான் ஏதாவது செய்ய வேண்டுமே!

தனது கால்ச்சட்டை பையில் இருந்து ஒரு குமிழியை ஹென்றி எடுத்தார். அதில் இருந்த மாத்திரைகளை கையில் தட்டினார்.












அது பயங்கரவாதிகள் நீர்மூழ்கியா?
பாட்சா, நம்மை தீர்த்துகட்ட வழி செய்துவிட்டானா?


இல்லே, அது நம்ம பாஸ்! டொட்ட டாங்!
டைகர்! உன்னுடன் ரேடியோ தொடர்பு அறுந்துவிட்டது. இங்கே ரியோ நகர ஆபீசுக்குள் ராட்சத மீன் புகுந்துவிட்டதா சொன்னாங்க. அதனால் உங்க ரெண்டு பேரையும் காப்பாற்ற நானே நேரில் வந்தேன். நீந்தி வாங்க!


டைகரும், ஹென்றியும், கடலில் குதித்து நீந்தி, அந்த நீர்மூழ்கி கப்பலுக்குள் போனார்கள். அப்போது பயங்கரவாதிகளின் கப்பல் வெடித்துச் சிதறியது.
டமால்!
வெரிகுட்! டைகர் உனக்கு அடுத்த வேலே தயாரா இருக்கு!
பாஸ்! ஜெல்லி மீன்கள் மூலம் நாச வேலே செய்ய நினைத்த பயங்கரவாதிகள் திட்டம் முறியடிக்கப்பட்டது.

ஆபீஸ் வந்ததும்—

அமெரிக்க ராணுவ ஆயுத உற்பத்தி நிலையத்தில் இருந்த நமது ரகசிய ஏஜெண்ட் ஒருவன் திடீர் என்று இறந்துவிட்டான். வாலிபனான அவன் இறக்கும்போது கிழவனாக, நீண்ட தாடியுடன் இறந்தான். சில மணி நேரத்தில் அவன் கிழவன் ஆனது, பயங்கரவாதிகளின் நவீன நாச வேலையா இருக்கலாம். நீங்க ரெண்டு பேரும் அங்கே போய் அதை விசாரியுங்க!

அதன்படி இருவரும், ஆயுத உற்பத்தி நிலையம் போனார்கள். ஆனால் அங்குள்ள தலைமை அதிகாரி அவர்களை சரியாக நடத்தவில்லை.

உங்களை நான் எப்படி நம்ப முடியும்? நீங்களும் பயங்கரவாதிகளாக இருக்கலாம் என சந்தேகப்படுகிறேன். சதி வேலை, நாச வேலை செய்பவர்களிடம் கடுமையா நடந்துகொள்ள எனக்கு உத்தரவு. எனவே உங்க ரெண்டு பேரையும் ஜெயிலில் அடைக்கிறேன்.


ஹென்றி! ராகு காலத்தில் புறப்பட்டு வந்தோமா? இப்படி கம்பி எண்ணிக்கொண்டு இருக்கோமே!
இது நம்மை அவமானபடுத்தும் செயல் ஆகும். இங்கு இருந்து தப்பிப்—போவோம்!


அப்போது அந்த இடம் பயங்கர வெடி சத்தத்தால் அதிர்ந்தது.
ஹென்றி! பயங்கரவாதிகள் ஏவுகணைகளை ஏவி வானத்தில் மிதக்கும் தங்கள் விண்கல ஆயுதத்தை நாச வேலையில் ஈடுபடுத்துகிறார்கள். அப்படி பார்த்தால், இந்த இடம் அவர்களின் அடுத்த இலக்கு!
அந்த ஏவுகணை பறக்க காரணம் யார்? அதை கண்டுபிடித்து, அவனை ஜெயிலில் தள்ளு!


பல மணி நேரம் கழித்து...
டைகர்! அந்த ஏவுகணை பறந்தது ஏதாவது தவறுதலா நடந்ததா? அல்லது சதி வேலையா?
ஹென்றி! சாப்பாடு வருது!


திடீர் என்று
ஹென்றி! அந்த வாலிப வீரன் நம் கண் முன்னாலேயே கிழவன் ஆகிவிட்டான்!


டைகர், தன்னுடைய குடைப் பிடியை திருகினார். அது, இரும்பு கம்பியை வெட்டும் "வெல்டிங்" கருவியாக மாறியது.
ஹென்றி! மனிதர்களை கிழவர்களாக மாற்றும் நாச வேலையை பயங்கரவாதிகள் செய்கிறார்கள். நாம் உடனடியா வெளியேறி அதைத் தடுக்கணும்!


நாம் உடனடியா ராணுவ அதிகாரியை எச்சரிக்கை செய்யணும். இவங்க, ஒன்றும் செய்யமுடியாத கிழவர்களா ஆயிட்டாங்க. தாங்கள் ராணுவ வீரர்கள் என்பதையே மறந்துவிட்டனர்!
பயங்கரவாதிகள், சுட வேண்டாம்! சும்மா உள்ளே நுழைந்தால் போதும். இந்த தளத்தை பிடித்து விடலாம்!




ஹென்றியுடன் தன்னை ஜெயிலில் அடைத்த ராணுவ அதிகாரியை பார்க்க டைகர் விரைந்தார். பயங்கரவாதிகள், வானில் மிதக்கும் தங்கள் விண்கலம் மூலம், அந்த ராணுவ தளத்தில் ராணுவ உடை அணிந்துள்ள வீரர்களை கிழவர்களாக்கி, ராணுவ தளத்தை பிடித்து, யுத்த தளவாடங்களை கைப்பற்ற இருப்பதை அவரிடம் சொல்ல நினைத்தார்.

ஆனால் அங்கே அந்த தளபதியும் கிழவனாகி இருந்தார்.







ஹென்றி! அங்கே பார்! அவன் ராணுவ பயிற்சியையே மறந்துவிட்டான். கையில் இருப்பது துப்பாக்கி என்கிற உணர்வு கூட இல்லை. இந்த நிலையில் விசையை இழுத்து, மண்டையை தூளாக்கி கொள்ளக்-கூடாது!


டைகர்! தக்க நேரத்தில் அவன் உயிரைக்-காப்பாற்றினாய்!


அந்த லாரியில் ஏறி தப்புவோம்!
அவர்களுக்கு நம்மைப் புரியவில்லை. உயிரைக் காத்த நம்மையே...!

அப்போது அங்கே ஒரு கவச மோட்டார் வந்தது. அதைப் பார்த்து 3 கிழ வீரர்களும் பயந்து ஓடினார்கள். லாரியில் ஏறி தப்ப முனைந்த டைகர் ஹென்றியிடம் கூறினார்—








அப்போது அங்கே ஒரு ஹெலிகாப்டர் விமானம் வந்தது.






ஹெலிகாப்டரில் இருந்து பாட்சா இறங்கினார். அதற்குள் டைகர், ஹென்றி இருவரையும், கவச மோட்டாரில் வந்த பயங்கரவாதி வீரர்கள் பிடித்துக் கொண்டனர்.






தீமை செய்யும் எங்க விண்கலம், இங்கே உள்ள தண்ணீர் தொட்டியில் ஒரு மருந்தை போட்டது. அந்தத் தண்ணீரைக் குடித்த எல்லோரும் தள்ளாடும் கிழவர்களா மாறிவிட்டார்கள். நீங்க 2 பேரும் அந்தத் தண்ணீரை குடிக்கவில்லை போலிருக்கு!

அதனால் நீங்க ரெண்டு பேரும் இப்போ தண்ணீர் குடியுங்க. கிழவங்களா மாறுங்க. பிறகு உங்க தலைமை நிலையம் போய், உடனடியா சரண் அடையா விட்டால், இந்த மருந்தை உலகம் முழுவதும் தண்ணீரில் போடுவோம் என்பதைச் - சொல்லுங்க!

அரக்கனே! உன்னிடம், சர்வதேச பயங்கரவாதிகள் ஒழிப்பு நிறுவனம் சரண் - அடையாது. உன் மருந்துக்கு மாற்று மருந்து கண்டு- பிடிப்போம்!

மாற்று மருந்தை நாங்களே தயார் செய்திருக்கோம். எங்கள் பக்கம் சேர்பவர்களுக்கு அதை கொடுப்போம்!



என்ன? அந்த குடை துப்பாக்கியா?
ஹென்றி! மாற்று மருந்து உள்ள அந்த பாட்டிலே எடு!




வீரர்களே! அவங்க ரெண்டு பேரையும் பிடியுங்க!
ஹென்றி! ரேடியோ வயர்லெஸ் கருவி உள்ள அறைக்கு போ. உடனடியா உதவி கோரணும். இந்த மருந்தை நாம் பரிசோதிக்கலாம்!




குடை, குண்டு துளைக்காத துணியால் ஆனது! சுட்டு பயன் இல்லே!

டைகரின் தலைமை ஆபீஸ்.

பாஸ்! ஹென்றி இந்த ரகசிய தகவல் கருவி வழியா பேசுகிறார்! அவங்களை பயங்கரவாதிகள் சுற்றி வளைத்துக் கொண்டார்களாம். உடனடியா உதவி தேவையாம்!

பதற்றப்படாதே! கொண்டா நான் பேசறேன். நானே போகிறேன்!

டிரான்ஸ்மீட்டரை அழி!

துப்பாக்கிக் குண்டு துளைக்காத குடையை பிடித்து, பயங்கர-வாதிகளிடம் இருந்து டைகர் தப்பித்து கட்டுப்பாட்டு அறைக்கு வந்தார். அப்போது அவர் மீது வெடிக்குண்டுகள் வீசப்பட்டன.

டைகரின் குடை, வெடிகுண்டையும் தாக்குப்பிடிக்கு!

தீவிரவாதிகளுடன் டைகர் போராடியபோது, ஹென்றி தலைமை நிலையத்துடன் பேசினார். பாய்ந்து வந்த வெடிகுண்டுகளை டைகர் லாவகமாக திருப்பி அனுப்பி-ஒன்றுடன் ஒன்று மோதச் செய்தார்.







ஹென்றி விசேட குடையுடன் பாய்ந்தார். டைகர் பின்தொடர்ந்தார்.



டைகர், ஹென்றி இருவரும், கீழே நின்றிருந்த ஏவுகணை டாங்கியில் ஏறினர். உடனே பாட்சா—

எல்லோரும் கீழே போங்க! அடித்தளம் பாதுகாப்பானது!

டாங்கியில் இருந்து ஒரு ராக்கெட் கணையை சுட்டார். பாதி கட்டிடம் இடிந்தது. பிறகு டைகர் ஒலிபெருக்கியில்—

பாட்சா! இங்கே வந்து சரண் அடைந்துவிடு!

டைகர் அதுதான் முடியாது. இந்த அடித்தளம் அணுகுண்டைக் கூட தாக்குப் பிடிக்கும். உன் ராக்கெட் கணை எம்மாத்திரம்!

பாட்சா! எங்கள் செய்திப்படி இதோ ராணுவ விமானங்கள் வந்துவிட்டன!

ஹென்றி! இனி இறங்குவோம்!

டைகர்! யார் இந்த கிழவர்கள்?

அவர்கள் அமெரிக்க ராணுவ வீரர்கள். தீவிரவாதிகளின் சதி வேலைக்கு பலி ஆனவர்கள்.

அவர்களுக்கு மாற்று மருந்து இதில் இருக்கு. இதைப் போல் நிறைய மருந்து தயாரிக்கணும்!

பாதிக்கப்பட்ட ராணுவ வீரர்கள் ஒரு விமானத்தில் ஏற்றப்பட்டனர்.


அவர்களுடன் மாறுவேடத்தில் இருந்த பாட்சா வேஷம் கலைந்து விமானியிடம் போனார்!


இந்த மோதிரத்தில் இருந்த மயக்க மருந்தை, உன் கழுத்தில் குத்தி உள்ளே செலுத்தி உள்ளேன்.
இனி நீ நான் சொல்கிறபடி செய்வாய். அந்த மருந்தின் தன்மை, அது!


இங்கேதான் பாட்சா அமைத்து இருக்கும் அடித்தளம் உள்ளது.
வீணாக அங்கே தோண்டி பலன் இல்லை. பாட்சா தப்பிவிட்டார்.
வந்தது மிஸ்டா எக்ஸ்.


பாஸ், நீங்களா?
டைகர்! உன் வீரச் செயலை பாராட்டுகிறேன். ஆனா நீ பாட்சாவை தப்ப விட்டுவிட்டாய். அந்த ஆள் மீட்பு விமானத்தில் தப்பிவிட்டார். இனி நாம் நமது தலைமை நிலையம் போய் ஆகவேண்டியதை பார்ப்போம், வா!

தலைமை நிலையத்தில்—




சார்! கெய்ரோவில் என்னையும் ஹென்றியையும் பாட்சா கடத்திப் போன இடம் இதுதான் சார்! இதன் அர்த்தம் என்ன?

இதன் அர்த்தம்
மீண்டும் திரையில்
அவன் செய்யப் போகும்
குறித்தும் நாம் சரண்
வேண்டிய அவசியம்
பேச இருக்கிறான்




டெலிவிஷன் திரையில் பயங்கரவாதிகள் தலைவர் பாட்சா திடீர் என்று தோன்றி மிஸ்டர் எக்சையும் அவரது ஆட்களையும் சரண் அடையச் சொல்லிவிட்டு திரையில் இருந்து மறைந்தார்.

பாட்சா எங்கே இருந்து பேசினான் என்று கண்டுபிடிக்க முடியுதா? உடனடியா நமது கெய்ரோ அலுவலகத்துடன் தொடர்பு கொள்!

வெளிநாட்டு ஒளிபரப்பு அலைகள் அனைத்தையும் துளாவி விட்டோம். கண்டுபிடிக்க — முடியவில்லை.

பாஸ்! ஒருவேளை பாட்சா இங்கேயே எங்காவது அருகில் இருந்தபடி உள்நாட்டு அலைவரிசையில் பேசி இருக்கலாம். நிச்சயம் அவர் எகிப்தில் இல்லை!

டைகர் நீ சொல்றதுதான் சரி. இங்கே அந்த ஆள் எங்கே இருக்கான் என்று கண்டுபிடி!




ஹென்றியும், டைகரும் டிபார்ட்மெண்டல் ஸ்டோர் உள்ள கட்டிடம் சென்றனர். மழை பெய்துகொண்டு இருந்தது.




அதோ வருகிறான். ஹென்றி தயாரா இருப்பான்!


இந்த பொம்மை துப்பாக்கி வெடிக்கிறதே! அட கடவுளே!
ஏதோ எதிர்பாராத விபத்து! ஸ்டோரை விட்டு எல்லோரும் ஓடுங்க!
ஆ! ஐயோ!


டைகர்! அந்த ரகசிய தளத்துக்கு வழி கண்டுபிடித்து விட்டேன். உடனே போகலாம்!


அதோ பாட்சா! அப்படி ஆனால் இது யார்?
முட்டாள்களே! இது நமது எதிரி டைகரின் ஏமாற்று வேலை!


டைகர்! லண்டன் நகர் மீது எப்படி அணு குண்டு வீசப்படும் என்று நான் சொல்லவில்லை உன்னாலும் கண்டுபிடிக்க முடியாது!
பாட்சா! அதைக் கண்டுபிடிக்க உண்மையை வரவழைக்கும் இந்த குண்டை சுடுகிறேன்!
இந்த பொம்மைகள் கன ஜோர்!


ஹென்றி பொம்மைகளைத் தொட, அது "ஷாக்" அடித்தது.
ஹென்றி! கையை வைத்துக்கொண்டு சும்மா இருக்கமாட்டான்! பாட்சா என்ன நடந்தது?
அந்த பொம்மையில்தான் அணுகுண்டை விண்கலத்தில் இருந்து பிரிக்கும் கருவி இணைக்கப்பட்டு இருந்தது. இப்போ அணுகுண்டு வானில் இறங்கி இருக்கும். அது புவி ஈர்ப்பு விசைக்குள் வந்ததும், லண்டனை நோக்கி திருப்பி வெடிக்கச் செய்வோம். அதற்கு தனி சுவிட்ச் உள்ளது.
அது இங்கே இல்லை. டிராபால்கர் சதுக்க சிலை உச்சியில் இருக்கு!


டைகர், ஹென்றியுடன் டிராபால்கர் சதுக்கத்தில் உள்ள சிலைக்கு பறக்கும் குடையுடன் விரைந்தார்.
ஹென்றி! இன்னும் 10 நிமிடம் இருக்கு! அதுக்குள் போகணும்! சீக்கிரம் வா!


ஹென்றி! அணுகுண்டு கீழே விழாமல் செய்து-விட்டேன்.


உயரே வானத்தில் அணுகுண்டு வெடித்து சிதறியது. அந்தச் சத்தம் கீழே கேட்டது. அதன் மூலம் வானில் மிக உயரத்தில் அந்த அணுகுண்டு அழிந்தது.
டமால்!

பிறகு டைகர், ஹென்றியுடன் பாட்சாவின் மறைவிடத்துக்கு வந்தார். அங்கே தலைவர் எக்ஸ்—

பாட்சா தப்பித்துவிட்டார். ஏவுகணையை செலுத்தக்கூடிய ஒரு நவீன நீர்மூழ்கி கப்பலில் இருந்துதான் அணுகுண்டு விண்கலத்தை வானத்துக்கு செலுத்தி இருக்கிறார்கள். பாட்சா அங்கேதான் போய் இருக்கிறார்.

பாஸ்! அணுகுண்டை வானவெளியிலேயே அழித்துவிட்டோம். அதனால் லண்டனுக்கு ஆபத்து இல்லை.

அணுகுண்டை வெடிக்க உதவியது இந்தக் குடைதான்! டாட்டடாங்!

முற்றும்.

ராணி சிண்டிகேட் சார்பில் வெளியிட்டவர், ஆசிரியர்: எஸ்.ராமஜெயம், 1091,பெரியார் நெடுஞ்சாலை,சென்னை–600 007. அச்சிட்டவர்: சி.கல்யாணசுந்தரம்,ராணி அச்சகம்,1091,பெரியார் நெடுஞ்சாலை, சென்னை–600 007.

கீழே உள்ள படங்களை "டிரேஸ்" எடுத்து 12 கட்டங்களாக வெட்டி எடுக்கவும். பிறகு அதை ஒரே உருவமாக அமைக்கவும். (விடை: கீழே.)
















விடை:

உங்கள் கருத்து

## பொன் தேவதை!

ஜேம்ஸ்பாண்ட் எப்போது வருவார் என்று எதிர்பார்த்து இருந்த எங்களுக்கு "பொன் தேவதை!" நல்ல விருந்து!

—ஜீ. பிரிரேனு. காரைக்கால்–2.
—ஏ. வேல்ராஜா, விளாத்திகுளம்.
—எம். ஏ. சேக் தாவூத், கொடைக்கானல்.
—ஆர் கோபால், மன்னார்குடி–18.
—ச. கோகுலகிருஷ்ணன், புதுக்கோட்டை–2.
—து. ரகுபதி, நற்சாந்துபட்டி.

கடலில் கட்டி இழுத்துச் செல்லப்படும் ஜேம்ஸ், கொடியவர்களிடம் இருந்தும் சுருக்களிடம் இருந்தும் தப்பித்த விதம் அப்பப்பா, அருமை! —வி. வனஜா, சிறுபாக்கம்.
—சேந்தை. ம. முரளி, சேந்தமங்கலம்.
—எம். தேவராஜ், ராயபுரம், சென்னை–13.
—எம். ஜெயந்தி, சென்னை–2.
—எஸ். கல்யாணசுந்தரம், வாழ்மாணப்பாளையம்.
—எஸ். ஜெகநாதன், பெங்களூர்.
—மகயூப் அலி, நீடூர்.
—ஏ. சலாவுதீன், சோழசக்கரநல்லூர்.

ஜேம்ஸ்பாண்ட், அவசரகால கதவைத் திறந்து, பர்னபாசை வெளியே விழச் செய்யும் காட்சி உடலை புல்லரித்தது!

—சா. அன்பழகன், அணைக்கரை.
—ஆர். எம். எஸ். சிவகுமார், திருச்சி–18.
—எஸ். ராஜேந்திரன், திருவிசநல்லூர்.

"பொன் தேவதை", ஒரு புதுக் கவிதை!

—ஏ. பிரார்த்தனு, தச்சநல்லூர்.

## எஸ்டேட் பேய்! (14-வது அத்தியாயம்)

வாரத்துக்கு வாரம், வரிக்கு வரி திகிலை ஊட்டிய கதை, எஸ்டேட் பேய்! —அ. ரமேஷ், கடலூர்–3.
—எஸ். லதாப்பிரியன், மணப்பாறை.
—முகமது யூசுப் அலி, திட்டச்சேரி.
—செ. தமிழ்ச்செல்வி, நாகர்கோவில்–1.

கொலைப் பாறையில் அடுத்து என்ன நடக்கும் என்று குலை நடுங்குகிறது! சபாஷ் ராம்ஜி! —அ. ராஜம்மாள், கோவை–18.
—ஆர். செந்தில்குமார், குமரேசபுரம்.
—எல். பரணீதரன், உத்திரமேரூர்.

மனோஜ் தன்னை காக்க, இறுதியில் கையாண்ட முறை அருமை! —இ. ஆபிசாபானு, மணப்பாறை–6.
—ம. கு. ரவிச்சந்திரன், மதுரை–9.

# ரூ. 50- பரிசு: கருத்துப் போட்டி-29

"மின் படை!" சித்திரக் கதையை படித்துவிட்டீர்கள் அல்லவா? இனி இந்தக் கதையில், உங்கள் மனதைக் கவர்ந்த சம்பவம் எது? அதற்கான காரணம் என்ன? என்று உங்கள் கருத்தை, "ராணி காமிக்ஸ்", ஒரு பக்க அளவுக்கு மிகாமல், எழுதி அனுப்புங்கள்.

மிகச் சிறந்த கருத்துக்கு ரூ. 50 பரிசு வழங்கப்படும்.

தேர்ந்து எடுக்கப்பட்ட கருத்து, 1-2-86 இதழில் பிரசுரிக்கப்படும்.

கருத்துப் போட்டி நிபந்தனைகள்:—

(1) கருத்துக்கள் எங்களுக்கு வந்து சேரவேண்டிய கடைசி தேதி 10-1-86. அதன்பின் வரும் கருத்துக்கள் போட்டிக்கு ஏற்றுக்கொள்ளப்பட மாட்டா.

(2) போட்டியில் கலந்து கொள்பவர்களுக்கு வயது வரம்பு கிடையாது.

(3) போட்டியில், ஆசிரியர் தீர்ப்பே முடிவானது. சட்டப்படி கட்டுப்படுத்த முடியாது.

(4) கீழே உள்ள பாரத்தை பூர்த்தி செய்து, "கருத்து"டன் சேர்த்து அனுப்ப வேண்டும். அது இல்லாமல் வரும் கருத்துக்கள் ஏற்றுக்கொள்ளப் படமாட்டா.




முகவரி:—
கருத்துப் போட்டி,
"ராணி காமிக்ஸ்",
1091, பெரியார்
நெடுஞ்சாலை,
சென்னை-600 007.

கருத்துப் போட்டி எண்: 29

பெயர்: ........................................

முகவரி: ........................................

........................................

........................................

........................................

போட்டி நிபந்தனைகளுக்கு கட்டுப்படுகிறேன்.

........................................

(கையொப்பம்)

# ராணி காமிக்ஸ்

அடுத்த இதழ்—
பொங்கல் மலரில்..!



இன்ஸ்பெக்டர் ஆசாத் துப்பறியும்,

# கொள்ளைக் கூட்டம்!

+1 மன்னர் பீமா தோன்றும், **ஏழாவது குகை!**

+2 டைகர் தூள் பறத்தும், **கிறிஸ்துமஸ் பரிசு!**

3 சித்திரக் கதைகள்! — மற்றும்

**சித்ரா மணாளன்**
எழுதும்,
**தொடர் கொலை!**
புதிய தொடர் கதை ஆரம்பம்!

ரூ. 50 பரிசு:
வாசகர் போட்டி!

படிக்கத்
தவறாதீர்கள்!

ராணி
காமிக்ஸ்

**15.1.86-ல் வெளிவருகிறது!**

